# வீரசைவ விளக்க வினா விடை

## முதற் பாகம்

# நான் யார்?

பிரசுரகர்த்தர்: டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
அடையாறு, சென்னை-20.

புராணிகர், காளத்தி
திரு. இ. சிதம்பரசாமி பாண்டியன்
அவர்கள்

அன்பளிப்பு

# வீரசைவ விளக்க வினா விடை

1. சீடன்.—ஸத்குருவே! அடியேன் தங்களிடம் எனக்குள்ள சந்தேகங்களைக் கேட்டுத் தெளிய வேண்டுமென்னும் கருத்துடன் வந்திருக்கிறேன். அருளுதல் வேண்டும்.

குரு.—அந்தச் சந்தேகங்கள் எவை?

2. சீடன்.—நான் வீரசைவன். நான் சைவர்களுடன் கூடிக் காலங் கழிக்குங்கால், அவர்கள் செய்யும் உபந்யாசங்களையும், ஏனைய சமயிகள் செய்யும் உபந்யாசங்களையும் கேட்கப்போதல் உண்டு. அவர்களிற் சிலர் வீரசைவம் நவீனமானதென்று கூறுகின்றனர்; சிலர் வீரசைவம் (சிவாத்துவிதம்) என்னும் வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திற் சீறுகின்றனர்; வேறு சிலர் வீரசைவ சாத்திரங்களையும், வீரசைவப் பெரியார்களையும் இகழ்ந்து பேசுகின்றனர்; இன்னும் சிலர் பலவாறாகவும் பேசுகின்றனர். ஆதலால், அடியேன் மிகவும் மனவருத்த முற்று, சுவாமிகளின் சந்நிதானத்துக்கு வந்திருக்கின்றேன். அருளுதல் வேண்டும்.

குரு.—பிள்ளாய்! தமது சமயத்தின் உண்மைப் பொருளையும், ஏனைய மதத்தின் உண்மைப் பொருளையும் அறிந்தவர்களான மேதாவிகள் வீரசைவத்தை ஒருகாலும் இகழமாட்டார்கள். ஸ்ரீ சங்கராசாரியரும், அவர் பரம்பரையினரும் இயற்றிய சரித்திரங்களிலும், சைவசமய குரவர் மூவராகிய திருஞான சம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் அருளிய தேவாரங்களிலும், மாணிக்கவாசக சுவாமிகள் வீரசைவரென்று விளங்குவதால் அவர் அருளிய திருவாசகத்திலும் வீரசைவ நிந்தையிராதென்பதற்கு யாதொரு சந்தேகமும் இல்லையாம்.

3. சீடன்.—மாணிக்கவாசகர் வீரசைவரென்பது எப்படி?

குரு.—இது மிகப் பெரியதோர் விஷயம். இதனைத் தனித்த விஷயமாக்கிக்கொண்டு பின்னர் பேசலாம்; ஏனெனின், இது

பற்றிப் பேசுவதற்கு நீண்ட காலம் வேண்டும். அதனால், நீ உத்தேசித்து வந்த காரியம் நிறைவேறாது. உனக்கு நற்காலம் வாய்த்திருப்பதனாற்றான் நீ உண்மை ஞானம் பெற ஈண்டு வந்திருக்கின்றாய். நீ வீரசைவசமயத்தை இகழ்பவர்களின் மீது கோபங் கொள்ளாதே, நாம் அவர்களுக்குத் தக்க சமாதானம் சொல்லுவோம். நீ இவ்விடம் உத்தேசித்து வந்த காரியந்தான் என்னை ?

4. சீடன்.—குருவே ! அடியேனது உண்மை ஸ்வரூபத்தினை யறியாமையினால் உண்டான ஆவரண தோஷத்தைப் போக்கிக் கொள்ளும் பொருட்டுத் தங்கள் சந்நிதியை யடைந்தேன் ; ஆதலால், நான் யார்? என்பதைக் கிருபை செய்தருளுதல் வேண்டும்.

குரு.—பிள்ளாய் ! உன் ஸ்வரூபத்தை யறிந்து கொள்ளும் ஆவல் உனக்கு உண்டானதனால் நீ தன்னியன், கிருதக்ருத்யன், உத்தமாதிகாரி ; ஆதலால், உன் மீது எனக்கு உண்டான சந்தோஷத்தினால் உண்மை ஸ்வரூபத்தை நான் நன்றாய் விளங்கச் செய்கிறேன். கவனமாய்க் கேள். முதலில் உன்னைச் சோதிப்பான் ஒரு கேள்வி கேட்கிறேன். உத்தரம் கொடு, பார்ப்போம்.

5. சீடன்.—சுவாமி ! கேளுங்கள்.

குரு.—நீ யார் ? அந்த நீ என்பதை யறிந்திருக்கின்றாயா ?

6. சீடன்.—அறிந்திருக்கின்றேன்.

குரு.—எப்படி ?

7. சீடன்.—நான் மனிதன், பருத்திருக்கிறேன், இளைத்திருக்கின்றேன், நான் மனிதன், பிராமணன், க்ஷத்திரியன், என்றற்றொடக்கத்து அநுபவத்தினால் மனிதத்தன்மை முதலிய தர்மங்களுடன் கூடின ஸ்தூல தேகத்தில் நான் என்னும் புத்தியுண்டாகின்றது ; அதனாலும், மண், பெண், பொன், மக்கள் முதலியவற்றினும் இத்தேகம் மிகவும் பிரியத்துக்கு விஷயமாயிருக்கின்றது ; அதனாலும் இத் தேகமே நான் என்பதை யறிகின்றேன்.

குரு.—நான் என்று அறிந்திருக்கின்ற இந்த ஸ்தூல தேகத்தின் ஸ்வரூபத்தை முதலில் அறிந்துகொள். தாய் தந்தையர்கள் உண்ணும் அன்னத்தினால் கிரமக் கிரமமாகத் தந்தையினிடத்து வீரியமும், தாயினிடத்து இரத்தமும் உண்டாகின்றன. அவை அவ் விருவரின் ஸையோக காலத்தில் கூடித் தாயின் வயிற்றில் ஒன்றாய் நின்று விடு

கின்றன; அவ்வொன்றானது தாயின் இரத்தத்தினால் இரத்தம், மாமிசம், தோல் முதலியவைகளும், தந்தையின் வீரியத்தினால் எலும்பு, நரம்பு, மஜ்ஜை முதலியவைகளும் உண்டாகப்பெற்று, நானா வட்டத்தில் வளர்ந்து, ஒன்பது மாதம் நிறைந்த பின்னர்த் தாயின் கர்ப்பத்தினின்று வெளியில் வந்து, பால் முதலான அன்னத்தினால் போஷிக்கப்பெற்று, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தம் நான்கையும் அடைதற்குச் சாதனமாய், மரணத்தின் பின்னர் அன்னரூபமான பூமியில் அடங்குவதாகின்றது; அதுவே ஸ்தூலதேகமாம். இது கேவலம் அன்னத்தினாலுண்டானதனால் அன்னமயகோசமெனப்படும்.

நற்சீடனே! இந்த ஸ்தூல தேகம் உனக்கு அந்நியமாயிருப்பதனால் இது நீயல்ல; எவ்வாறெனின் :—

(1) எந்த வஸ்துவில் எனது என்னும் மமதையுண்டாகின்றதோ, அது உனக்கு வேறாயிருக்கும். என் மனைவி, என் மகன், என் வயல், என் வீடு என்றற்றொடக்கத்து வியவகாரத்தில் மனைவி முதலான வஸ்துக்களுக்கு நீ எவ்வாறு வேறாயிருக்கின்றாயோ, அவ்வாறே, என் தேகமென்று சொல்வதனாலும் நீ தேகத்திற்கு வேறாயிருக்கின்றாய்.

(2) அறிபவன் அறியப்பட்ட வஸ்துவுக்கு வேறாயிருப்பான்; எவ்வாறெனின், குடத்தை நீ அறிகின்றாய் (பார்க்கின்றாய்); குடம் உன்னால் அறியப்படுகிறது. குடத்தை யறிபவன் குடமாகாமல் அதற்கு எவ்வாறு வேறாயிருப்பானோ? அவ்வாறே நீ என் தேகம் பருத்திருக்கின்றது, கறுத்திருக்கின்றது, அசுத்தமாயிருக்கின்றது, ஜடமாயிருக்கின்றது, குளிர்ந்திருக்கின்றது, சுடுகின்றது என்றற்றொடக்கத்துத் தேகத்தின் ஸ்வரூபத்தை யறிவதனால் அதற்கு வேறாயிருக்கின்றாய். குடமும் தேகமுமாகிய இரண்டும் ஜடமாயிருக்கின்றன; அறியப்படுகின்றன; உருவங்களாயிருக்கின்றன; விகாரமாகின்றன; பஞ்சபூதங்களின் காரியமாயிருக்கின்றன; ஆதலால், தேகம் குடத்துக்குச் சமானமானதாம். குடம் தன்னையும், தனக்கு வேறாயிருப்பதையும் எங்ஙனம் அறியாதோ? அங்ஙனமே தேகமும் தன்னையும், தனக்கு வேறாயிருப்பதையும் அறியாது. ஒருகால் அறியுமாயின், நித்திரை, மரணம், மூர்ச்சை முதலான அவஸ்தைகளிலும் அறிதல் வேண்டும். அக் காலங்களில் இது குடத்தைப்

போல ஜடமாயிருக்கின்றதென்பது மனவுணர்ச்சியுடையார் யாவர்க்கும் தெரிந்த விஷயமாம். நீ அறிபவனுனதனால் சேதனனாயிருக்கின்றாய் ஆதலால், இந்த ஜடமான தேகம் உனக்கு வேறானதாம்; அது நீயல்ல.

8. சீடன்.—தேகம் வளர்வதனால் அதனை ஜடமென்று சொல்லுவது எப்படி?

குரு.—ஜடமான மண்மேடானது குப்பை, கூளம், முதலியவைகளை நாடோறும் சேர்ந்து வருவதால் வளர்வதுபோல், அன்னமய தேகமும் அன்னமும், நீரும் நாடோறும் சேர்ந்து வருவதால் வளர்கின்றது. வளர்ந்த மாத்திரத்தினால் மண்மேடு எப்படி சேதனமாகாதோ? அப்படியே தேகமும் சேதனமாகாது.

9. சீடன்.—தேகம் ஜடமாயின், சஞ்சரித்தல் முதலிய காரியங்களை எப்படிச் செய்கின்றது?

குரு.—புகைவண்டியும், புகைக்கப்பலும் ஜடமாயினும், இயந்திரத்திலுள்ள புகையின் சக்தியால் எப்படிப் போக்கு வரவுடையனவாகின்றனவோ? நாடகத்திலுள்ள பிரதிமைகள் சூத்திரத்தின் ஆதாரத்தினால் எப்படிக் குதித்தாடுகின்றனவோ? அப்படியே தேகமும் ஜடமாயிருப்பினும், பிராணவாயுவின் சக்தியினால் போக்குவரவுடையதாயிருக்கின்றது. எதுவரையில் தேகத்தில் பிராணன் இருக்குமோ? அதுவரையில் வியவகாரங்களெல்லாம் நடைபெறும். பிராணன் போன மாத்திரத்தில் ஒரு வியவகாரமும் நடைபெறாது. அது கட்டைபோல விழும்; ஆதலால், பிராணாதி வாயுக்களினால் தேகாதி காரியங்கள் நடக்கின்றனவென்பது அறிந்துகொள்.

10. சீடன்.—தேகத்துக்கு உண்டாகும் சுகதுக்கங்கள் எனக்கு உண்டாயிருப்பதனால், தேகமே நானாயிருக்கிறேன்.

குரு.—எந்த வஸ்துவில் எனது என்னும் அபிமானம் வைப்பாயோ? அந்த வஸ்துவின் சுகதுக்கங்கள் உனக்கு உண்டானவைபோலத் தோன்றும். மனைவி, மக்கள் முதலியவரிடத்தில் என்னைச் சேர்ந்தவர்களென்னும் அபிமானம் வைப்பதனால் அவர்களுக்கு உண்டாகின்ற சுகதுக்கங்கள் உனக்கும் உண்டாகின்றன. தேகத்துக்கு உண்டாகும் சுகதுக்கங்கள் எனக்கு உண்டாவதனால் தேகமே நான் என்றால், மனைவி, மக்கள், முதலியவர்களுக்கு வஸ்திரம், தனம், தானியம், முதலியவற்றின் லாப நஷ்டங்களினால்

உண்டாகும் சுகதுக்கங்கள் உனக்கு உண்டாவதனால் மனைவி, மக்கள், முதலானோரையும் நீ **நான்** என்று சொல்லுதல் வேண்டும். அப்படி எங்கே சொல்லுகின்றாய்? இந்தத் தேகத்தில் வந்து சேர்ந்த பேய் எதுவரையில் இந்தத் தேகத்தில் **எனது** என்னும் அபிமானம் வைத்திருக்கின்றதோ? அதுவரையில் இந்தத் தேகத்துக்கு மாந்திரிகனாலும், அடிவிழுதல் முதலியவற்றினாலும் உண்டாகும் துக்கம் அப்பேய்க்கு உண்டாகின்றது. பேய் பிடிக்கப்பட்ட காலத்தில் இந்தத் தேகத்தில் **யான், எனது** என்னும் அபிமானம் உனக்கு இல்லாமையினால் அதன் துக்கம் உனக்கு உண்டாவதில்லை. எப்போது தேகத்தில் பேயின் சம்பந்தம் ஒழிந்துபோக, நீ **எனது** என்னும் அபிமானம் வைப்பாயோ? அப்போது தேகத்தின் துக்கம் உனக்கு உண்டாகின்றது. தேகத்தின் துக்க முதலியவை உனதாயின், உறக்கத்திலும் தேகத்தின் துக்கம் உனக்கு உண்டாதல் வேண்டும்; உண்டாவதின்றாம். ஆனால், நோயாளியானவன் தூங்கினால் சுகமாகுமென்று சொல்லுகின்றான். ஏனெனின், தூக்கத்தில் இந்த ஸ்தூலதேகம் அவனுக்குத் தோன்றுவதில்லை; இந்தத் தேகத்தில் **யான், எனது** என்னும் அபிமானம் அவ்விடம் அவனுக்கு இல்லை. ஆதலால், தேகத்தின் துக்கம் தூக்கத்தில் அவனுக்கு உண்டாவதில்லை. தூக்கத்தில் துக்கமில்லாமல் கேவலம் சுகமிருக்கின்றதென்பது எல்லாருடைய அநுபவமாம். ஆதலால், எதுவரையில் இந்தத் தேகத்தில் **யான், எனது** என்னும் அபிமானம் இருக்கின்றதோ? அதுவரையில் தேகத்தின் துக்கம் உனக்கு உண்டாகின்றது. இந்தத் தேகத்தில் அபிமானம் ஒழிந்தவுடனே இதன் துக்கம் உனக்கு உண்டாவதில்லையாம். ஆதலால், அபிமானமே துக்க காரணமாம். அபிமான மின்மையே சுகவிளக்கத்திற்கேதுவாமென்று அறிதல் வேண்டும். இந்தத் தேகத்தில் **யான், எனது** என்று எவ்வளவுக் கெவ்வளவு மேன்மேலும் அகந்தை, மமதை கொள்வாயோ, அவ்வளவுக் கவ்வளவு மேன்மேலும் துக்கம் உனக்கு உண்டாகின்றது. எவன் இந்தத் தேகத்தைத் தனக்கு அந்நியமானதென்று அறியாமல் இதில் **யான், எனது** என்னும் அபிமானம் வைப்பானோ? அவன் கோடி தேகத்தில் (ஜன்மத்தில்) தவம் செய்யினும் அவனுக்குத் தன் உண்மை ஸ்வரூபம் விளங்காது. மேலும், இந்தத் தேகத்தில் **யான், எனது** என்னும் அபிமானம் வைப்பதனால் அநேக தோஷங்கள் உனக்கு உண்டாகும்.

11. **சீடன்.**—அத் தோஷங்கள் எவை ?

**குரு.**—1. ஸ்தூல தேகமானது மாமிசம், மேதை, இரத்தம், நரம்பு, எலும்பு, மஜ்ஜை, இரத்தம் என்னும் ஏழு தாதுக்களோடு கூடியது. இந்தத் தாதுக்கள் உண்ட அன்னத்தினாலும், நீரினாலும் உண்டானவை. அன்னத்தினாலும், நீரினாலும் உண்டான தேகமே **நான்** என்றால், இரத்த முதலிய ஏழு தாதுக்களையும் **நான்** என்று சொல்லுதல் வேண்டும். அவற்றை **நான்** என்று சொல்லுதல் எவ்வாற்றானுங் கூடாதன்றோ ?

2. மேலும், பன்றி, நாய், நரி, முதலியவற்றின் தேகங்களும் ஏழு தாதுக்களினால் உண்டானவையாயிருத்தலின், அவற்றையும் **நான்** என்று சொல்லுதல் வேண்டும்.

3. அன்ன ரூபத்தினாலும், ஜல ரூபத்தினாலும் உண்டான தேகமே நீ யாயின், அன்னம், ஜலம் இவற்றின் ரூபத்தினால் உண்டான மல மூத்திரங்களையும் நீ **நான்** என்று சொல்லுதல் வேண்டும்.

4. என்றும் காரிய காரணங்கள் அபேதமாயிருப்பனவாம்; அதனால், காரிய ரூபதேகத்தை **நான்** என்பவர் காரண ரூப அன்னத்தையும், தானியாதிகளையும் **நான்** என்று சொல்லுதல் வேண்டும்.

5. உனக்குத் தோன்றும் தேகத்தை நீ **நான்** என்று கூறின், உலகத்தில் தோன்றும் தேகமனைத்தையும், கல், மண், முதலிய பதார்த்தமனைத்தையும், பஞ்ச மகாபூதங்களையும் **நான்** என்று சொல்லுதல் வேண்டும்; ஏனெனின், தேகம் உனக்குத் தோன்றுவது போல கல், மண் முதலிய சகலமும் உனக்குத் தோன்றுகின்றனவன்றோ ?

6. ஒரே வஸ்துவில் **யான், எனது** என்னும் இரண்டு வியவகாரங்கள் நிகழாவாம். எந்த வஸ்துவில் **எனது** என்னும் வியவகாரம் நிகழுகின்றதோ ? அந்த வஸ்துவில் **நான்** என்னும் வியவகாரமே நிகழாது ; எப்படியெனின், **எனது** என்னும் வியவகாரத்திற்கிடமாகிய மனைவி, மகன், வயல், வீடு, பொருள் முதலான வஸ்துக்களை **நான்** என்னும் வியவகாரத்திற் குரியனவாகக் கூறலாமோ ? அங்ஙனம் கூறுவது தோஷமும் சிரிப்புமாமன்றோ ?

7. மனிதன் வசிப்பதற்காக வீடு இருப்பது போல, நீ வசிப்பதற்காகத் தேகமென்னும் வீடு கடவுளால் உண்டாக்கப்பட்டிருக்கின்றது. மனிதன் வீட்டில் நெடுநாள் வசித்திருந்து, வாழ்ந்து, அவ்வீடு நாசமடையும் சமயத்தில் அதனை விட்டு வேறொரு வீட்டுக்குப்

போவது போல, நீயும் இந்தத் தேகத்தில் சிலநாள் வசித்திருந்து, இத் தேகம் நாசமடையும் சமயத்தில் அதனை விட்டு வேறொரு தேகத்துக்குப் போவாய்; போய் அதிலிருப்பாய். நான் முற்பிறப்பில் எவ்வளவு பாவம் செய்தேனோ? அதற்காக இப்போது இவ்வளவு கஷ்டப்பட வேண்டியவனானேனென்றும், இப்பிறப்பில் நீதியுடன் நடந்தால் மறு பிறப்பிற் சுகமுண்டாகு மென்றும் சொல்லும் உலக வழக்கம் இருப்பதனால் நீ முற்பிறப்பில் இருந்தாய்; இப்போது இத் தேகத்தில் இருக்கின்றாய், இத் தேகத்தின் பின்னர் மற்றொரு தேகத்துக்குச் செல்வாய். ஆதலால், முற்பிறப்புக்கும், மறுபிறப்புக்கும் நீ எப்படி வேறாயிருப்பாயோ? மேலும், வீட்டிலுள்ள மனிதன் எப்படி வீட்டுக்கு வேறாயிருப்பானோ? அப்படி இத் தேகத்திலுள்ள நீயும் இந்தத் தேகத்துக்கு வேறாயிருக்கின்றாய். உன் தேகம் அழியுமாயின், மனிதன் அநேக சட்டைகளையுடுத்துக் கொள்வது போல, நீயும் அநேக தேகங்களை யடைவாய்; ஒருவன் வீட்டிலிருந்த மாத்திரத்தினால் வீடே நான் என்பதும், சட்டையை யுடுத்த மாத்திரத்தினால் சட்டையே நான் என்பதும், அவனுக்கு எப்படிப் பொருந்தும்; பொருந்ாதன்றோ? அது தோஷமும் சிரிப்புமாமன்றோ? அப்படி நீ இந்தத் தேகத்தில் இருந்த மாத்திரத்தினால் தேகமே நான் என்பது தோஷமும் சிரிப்புமாம்.

8. தேகமே நான் என்பதனால் எந்தெந்தத் தோஷங்கள் உண்டாகுமோ? அந்தத் தோஷங்களே தேகம் எனது என்றாலும் உண்டாகும். உனக்குத் தோன்றும் தேகத்தை நீ எனது என்றால், உலகத்தில் தோன்றும் தேகங்களை யெல்லாம் எனது என்று சொல்லுதல் வேண்டும். நீ தேகத்துக்கு உண்டாகும் துக்காதிகள் எனக்கு உண்டாகின்றனவென்றால் தேகங்களெல்லாவற்றின் துக்காதிகளும் உனக்கு உண்டாதல் வேண்டும். எல்லாத் தேகங்கள் போல இதுவும் ஒரு தேகமாதலால், இவ்வொரு தேகத்திலேயே அபிமானமும் மற்றவற்றில் அபிமான மின்மையும் எதற்கு? எந்த வஸ்துக்கள் கேவலம் உன்னால் உண்டாகின்றனவோ? உன்னை எப்போதும் விட்டுப்பிரியவில்லையோ? அந்த வஸ்துக்களையே நீ எனது என்று உண்மையாய் நம்பு. என் மனைவி, என் வீடு, என் தேசம் என்று சொல்லும்போது அவ் வஸ்துக்கள் மற்றைய போது உன்னுடையன வன்றாம். அந்த வஸ்துக்களில் விசேஷ வியவகாரமிருக்கும்போது இதனை யறிதல் வேண்டும். வியபிசாரப் பெண் தான் அந்நிய புருஷனுக்குப் பெற்ற

மகனைத் தன் மகனென்று கட்டித் தழுவிக் கொள்ளும் கணவனைப் பார்த்து எப்படிச் சிரிப்பாளோ, அப்படியே என் தேகமென்று இதனைக் கருதுகின்றவனைப் பார்த்து பிருத்திவி தேவி சிரிப்பாள். **எனது** என்னும் இத் தேகத்திலுள்ள ஒரு மயிரையாயினும் செய்யும் வல்லமை உனக்கு உண்டோ? இது எப்போதாயினும் உன்னைவிட்டுப் பிரியாமலிருப்பது முண்டோ? ஒருவன் வசித்தற்கு வீட்டைக் கொடுத்தால் அவ் வீட்டையே **எனது** என்னும் அதமனைப் போல, கடவுள் நீ வசிக்க இந்தத் தேகமென்னும் வீட்டை அருள் செய்தால் இதனை **எனது** என்பது பாவமல்லவோ?

தேகாத்ம புத்திஜம் பாபம்
நதத் கோவத கோடிபி:

(தேகமே நானென்பவனுக்குக் கோடி பசுக்களைக் கொன்றவனினும் அதிக பாவம் வரும்) என்ற வசனத்தின்படி தேகமே **யான்**, **எனது** என்று எவன் சொல்லுவானோ? அவன் பாவியும், சிவத் துரோகியுமாவான். முடிவில் நரகத்தை யநுபவிப்பான். ஆதலால், நீ தேகத்திலுள்ள **யான்**, **எனது** என்னும் அபிமானத்தை விட்டு விடு.

9. எந்த வஸ்து வாதத்திற்கு விஷயமாயிருக்கின்றதோ, அந்த வஸ்து வாதம் செய்பவனுக்கு வேறாயிருக்குமென்பது நியாயமாம்; எப்படியெனின், இந்த மரம் தேக்கோ? அல்லவோ? என்று வாதம் செய்பவன் அந்த மரத்துக்கு வேறாயிருத்தல் போல, இந்தத் தேகம் நானோ? அல்லவோ? என்று வாதம் (விசாரம்) செய்பவனான நீ இந்தத் தேகத்துக்கு வேறாயிருக்கின்றா யென்பது சித்தமாயிற்று.

12. **சீடன்.**—எனக்கும், இந்தத் தேகத்துக்கும் பேதமிருப்பின், இந்தத் தேகமானது கல், கட்டைகள் போல எனக்கேன் எதிரே தோன்றுவதில்லை? ஸத் குருவே! இந்தத் தேகத்துக்கு நான் வேறாயிருப்பதைத் தெளிவாய் அறிவித்தருளுதல் வேண்டும்.

**கு.**—குழந்தாய்! கனவில் ஒரு நாள் நீ அரசனாயிருந்ததையும் (அரசன் தேகம் வந்ததையும்), வேற்றரசன் வந்து அந்தத் தேகத்தை வெட்டிவிட்டதையும் எதிரே பார்த்தனையே. கனவில் அரசனாகி ராஜ்ய பரிபாலனஞ் செய்யுங்கால் இந்த ஸ்தூல தேகம் உனக்கு வேறாயிருப்பது உன் அநுபவத்திற்கு வருமோ? இல்லையோ? இதுவுமன்றி **யான்**, **எனது** என்றறிந்திருக்கும் இந்தத் தேகத்தை விட்டுக் கனவில் காசி, இராமேச்சுரம், மதுரை முதலிய க்ஷேத்திரங்களிலும், ஆகாயத்

திலும் நீ சஞ்சரித்திருப்பாய். இந்த ஸ்தூல தேகத்துக்கும் உனக்கும் அபேத மிருப்பின், அப்போது இந்தத் தேகமும் சஞ்சரித்தல் வேண்டு மல்லவா ? இது படுக்கையிலே கிடக்கும். இந்த அநுபவத்தினலா யினும் இந்த ஸ்தூல தேகத்துக்கு நீ வேறாயிருப்பது உறுதிப்படும். பரகாயப் பிரவேசத்திற் பயிற்சியுள்ளவர்கள் தம் தேகத்தை விட்டு, வேறு தேகத்திற் புகுந்து, அதிற் சிலநாள் தங்கி, வியவகாரஞ் செய்து, மறுபடியும் தம் தேகத்திலேயே வந்திருப்பதைக் கேட்டதில்லையோ ? (மண்டனமிசிரனுக்கும் ஸ்ரீ சங்கராசாரியருக்கும் துவிதாத்துவித விஷயமாய் வாதம் நடந்தபோது மண்டனமிசிரன் தோற்றுப் போனன். அவன் மனைவி சங்கராசாரியரை யடைந்து, ஆசாரியரே ! கணவனுக்கு மனைவி அர்த்தாங்கமானவ ளெனப்படுவதனல் என்னைத் தாங்கள் வாதத்தில் வென்றாற்றான் என் கணவனைப் பூரணமாய் வென்றவராவீர் ; ஆதலால், என் வினக்களுக்கு விடை கொடுத்தல் வேண்டுமென்று காமசாத்திரத்தின் விஷயமாய் வாதம் செய்யத் தொடங்கினள். ஆசாரியர் சில நாள் தாமதித்தல் வேண்டு மென, அதற்கு அவள் ஒத்துக் கொண்டாள். அதற்குள் அமருகனென்னும் அரசன் இறந்தான். ஆசாரியர் பாகாய வித்தையில் தேர்ந்தவராதலால், தமது தேகத்தை விட்டு, அவன் தேகத்திற் சேர்ந்தார். அப்போது எல்லாரும் அமருகன் பிழைத்தானென்று அறிந்தார்கள். ஆசாரியர் அவன் தேகத்திலிருந்து கொண்டு, அவனுடைய அநேக மனைவியர்களிடத்தில் போகம் செய்து நிபுணராகி, மறுபடியும் தமது தேகத்தில் வந்து மண்டனமிசிரனுடைய மனைவியைக் காமசாத்திரத்தில் வென்று வெற்றியடைந்தாரென்பது உலகம் அறிந்த கதையாம். இதுபோலப் பலகதைகள் உண்டு). இப்படி யுக்தி, அநுபவம், அநுமானம் முதலியவற்றினல் விசாரிக்கு மிடத்து, இந்தத் தேகத்துக்கு நீ வேறாயிருக்கின்றா யென்பது சித்தமாயிற்று. இன்னமும், பெண் முதலியவற்றினும் தேகத்தில் அதிகப் பிரியம் தோன்றும் ; அதனல் தேகமே நான் என்னும் உன் வாதம் ஒத்துக் கொள்ளத் தக்கதன்றாம். ஏனெனின், ஒருவர் மற்றொருவரை அடிக்க வந்தால் அவர் கை, கால், கண் முதலிய இந்திரியங்களுக்கு ஊனம் நேருதல் கூடாதென்று கருதித் தேகத்தை முன்னுக்குக் கொண்டு போகின்றனர் ; அதனல் தேகத்தினும் இந்திரியங்களில் அதிகப் பிரிய முண்டென்பது தோன்றும் ; ஆதலால், தேகம் அதிகப் பிரியத்துக்கு விஷயமன்றாம். இந்தக் காரணங்களினலும் தேகம் நீ யன்றாம். மேலும்,

தேகத்தின் தர்மங்களும் உனக்கு இல்லை யென்பதை நீ அறிந்து கொள்.

13. சீடன்.—அத் தர்மங்கள் எவை ?

குரு.—பிறத்தல், வளர்தல், மூப்படைதல், இறத்தல் என்பனவே ஸ்தூல தேகத்தின் தர்மங்கள். தேகம் நீ யன்றாகலின், பிறப் பிறப்புக்கள் உனக்கு இல்லையாம். இதுவுமன்றி,

1. ஜாதி (மனிதன், மிருகம், பக்ஷி முதலிய ஜாதி.)

2. ஆச்சிரமம் (பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந் நியாசி யென்னும் ஆச்சிரமம்.)

3. வருணம் (பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்னும் வருணம்.)

4. குலம் (இடையன், குயவன், பள்ளன் என்னும் குலம்.)

5. கோத்திரம் (வீர, நந்தி முதலிய கோத்திரம்.)

6. நாமம் (சங்கரன், வீமன், இராமன் முதலிய பெயர்) என்னும் இவ்வாறும் ஸ்தூல தேகத்திற் கற்பித தர்மங்களாம். ஆதலால், இந்த ஜாதி, வருணாச்சிரமங்களும் உனக்கு இல்லையாம். அப்படியே, தந்தை மகன், குரு சீடன், சுவாமி சேவகன் என்னும் சம்பந்தமும் ஸ்தூல தேகத்துக்கேயாம். அதனால் உனக்குத் தந்தை, தாய், மகன் மனைவி, உற்றாரென்னும் எந்தச் சம்பந்திகளும் இல்லையாம். இவை யெல்லாம் பிராந்திமயமென்று அறிந்துகொள்.

14. சீடன்.—தந்தையே! அப்படியாயின், நான் யார் என்று அறிந்து கொள்வேன்.

குரு.—பிள்ளாய்! உனக்கொரு உபாயத்தைச் சொல்லுகிறேன் ? கவனமாய்க் கேள். ஒருவன் வாழைத் தண்டை எப்போதும் அறியாதவனுக்குக் காண்பிக்கவேண்டின், அவன் வாழைமரத்தைக் கொண்டு வந்து, " தம்பீ! நீ இதன் மேலுள்ள மட்டையை உரித்துக் கொண்டே போ ; அந்த மட்டையை உரிக்க வுரிக்க உரித்தவை களைத் தண்டல்லவென்று எறிந்து விடு" என்றான். அவன் அப்படியே மட்டைகளையுரித்துக் கொண்டு போதலும் உள்ளே உரிக்க வராத ஒன்று மிஞ்சுவதாகக் கண்டான். அதுவே தண்டென்று அறிந்து கொண்டான். அவன் வாழைத் தண்டின் ஸ்வரூபத்தை யறிந்தமை போல நீயும் உன் ஸ்வரூபத்தை யறிதல் வேண்டும். இந்

த்தேகத்திலுள்ள ஒவ்வொன்றினையும் நீ நானோ? அன்றோ? என்று விசாரித்துக் கொண்டே போ. எதனிடத்தில் எனது என்னும் வியவகாரம் இருக்கின்றதோ? அது உனக்குத் தோன்றும்; எது வாதத்திற்கு விஷயமாயிருக்கின்றதோ? அது நீயல்லவென்று உண்மையாய் நம்பு.

நேதி நேதீதி நேதீதி சேஷிதம்
யத்பரம் பதம்!
நிராகர்த்ரும சக்ய த்யாத்வ
ததஸ்மீதி ஸுகீபவேத்

என்னும் வாதுளாகம வசனம் ஸ்தூல தேகத்தைக் குறித்துச் சொல்லியபடி, இது நீயல்ல, இது நீயல்ல, இது நீயல்ல என்று ஒவ்வொன்றினையும் விசாரித்துத் தள்ளுமிடத்து முடிவில் எது உத்தமமான பதமாய் மிஞ்சுமோ? அது ஆக்ஷேபிப்பதற்கு அசாத்தியமானதாம்; ஆனபடியினால், அந்த வஸ்துவே நான் என்று அறிந்து, சுகப்படு.

15. சீடன்.—குருநாதனே! அப்படிப்பட்ட பெருஞ் சுமையை அடியேன் மீது சுமத்துதல் வேண்டாம். நான் கண்டறிந்த விஷயத்தைச் சந்நிதானத்தில் அறிக்கையிடுகிறேன். தாங்களே நிர்ணயித்து, எனது உண்மை ஸ்வரூபத்தை எனக்கறிவித்து, என்னைக் காத்தருளல் வேண்டும். தேகத்தினும் இந்திரியங்களில் அதிகப் பிரியமிருப்பதனாலும், நான் பேசுகின்றேன், நடக்கின்றேன், கேட்கின்றேன் என்று இவ்விதமாக நானென்னும் புத்தி இந்திரியங்களிலிருப்பதனாலும் இந்திரியங்களே நானென்று அறிகின்றேன்.

குரு.—நம்மனோர் கஷ்டமான வேலையொன்று செய்யும்போது கை, கால், செவி முதலியவற்றில் யாதாவதொன்று சேதப்படினும் அதனைச் சிந்திப்பதில்லையாமன்றோ? நம்மனோர் என் பிராணன் மாத்திரம் போதல் கூடாதென்று சொல்வதனால் இந்திரியங்களினும் பிராணனில் அதிகப் பிரியம் தோன்றுவதனாலும், அப்படியே என் கால், என் கை, என் செவியென்று சொல்வதனாலும், என் செவி கேட்பதில்லை, என் கண் மங்கலாயிருக்கின்றது, என் நாக்கு ருசி பார்ப்பதில்லையென்றற்றொடக்கத்தனவாய் இந்திரியங்களின் ஸ்வரூபத்தை யறிவதனாலும், எப்போதாயினும் இந்திரியங்கள் நாசமடையினும், நீ அப்படியே யிருப்பதனாலும் இந்திரியங்கள் நீ யல்ல; அவற்றிற்கு வேறாயிருக்கின்றாய். மேலும், நான் பார்க்கின்றேன், நான்

தொடுகின்றேன் என்று சொல்லுகின்றாய். இதனால் பார்க்கிறவனும், தொடுகிறவனும் நீ ஒருவனே. பார்க்கும் கண்ணே நீயாயிருந்தால், அது எதனையாவது தொடவேண்டும்; தொடுவதோ இல்லை. ஆதலால், ஜடமான இந்திரியங்கள் நீயல்ல.

16. சீடன்.—செவி முதலிய ஞானேந்திரியங்கள் சப்தாதி விஷயங்களை யறிகின்றனவன்றோ ? அவற்றை ஜடமென்பது எப்படி ?

குரு.—இந்திரியங்களுக்குச் சுயமாய் அறியுந் தன்மையில்லை. கண்ணே ! நீ எங்கே யிருக்கின்றாய் ? என்று கேட்டால், நான் இவ்விடத்திலிருக்கின்றேனென்று சொல்ல அதற்குச் சக்தியுண்டோ ? இப்படி இந்திரியங்களெல்லாம் வல்லமை யில்லாதனவாம். கண்ணே! செவிக்கு நோயிருக்கிறபடியினால் இதுவரை அது அறிந்த சப்தத்தை இன்று நீ யறிந்து கொள்ளென்று சொன்னால், அது அதனை யறிதல் கூடுமோ ? இப்படியே ஒவ்வொரு இந்திரியமும் தான் அறியும் விஷயத்தை விட்டு மற்ற விஷயங்களை யறியமாட்டாது. மனமானது சிந்தனையில் அல்லது யாதாவதொரு ஆலோசனையில் படிந்திருக்கும் போது இந்திரியங்களுள் யாதொன்றும் தனது விஷயத்தை யறிவதில்லை; எனெனின், இந்திரியங்களுக்கு மனம் அதிபதியா யிருப்பதனால் அதன் பிரேரேபணையாகும்போது இந்திரியங்கள் வேலை செய்யும். அம் மனமே வேறொரு வேலையிலிருக்கும்போது இந்திரியங்களுக்குப் பிரேரேபணையில்லாமையினால் அவை தத்தம் வேலையைச் செய்வதில்லை. அப்படியே உறக்கத்தில் ஒவ்வொரு இந்திரியமும் தனது தனது விஷயத்தையாயினும் அறிவதில்லையாம். ஆதலினால், இந்திரியங்கள் ஜடமேயாம். நீ அவற்றை யறிபவனாதலின், அவை நீ யன்றாம். மேலும், இந்திரியங்களின் தர்மங்களும் உனக்கில்லையாம்.

17. சீடன்.—இந்திரியங்கள் எவை ? அவற்றின் தர்மங்கள் எவை ?

குரு.—இந்திரியங்கள் கர்மேந்திரிய மென்றும், ஞானேந்திரிய மென்றும் இரண்டு வகைப்படும். அவற்றுள் :

## (1) கர்மேந்திரியம்

வாக்கு—நல்ல வார்த்தை, தீயவார்த்தைகளைச் சொல்லுவது தொழிலாம்.

**பாணி** (கை)—ஜடப் பொருள்களைப் பற்றுவது; விடுவது; கொள்வது; கொடுப்பது.

**பாதம்** (கால்)—பூமி முதல் பஞ்சமகாபூதங்களினிடத்தில் சஞ்சரிப்பது.

**பாயுரு** (குதம்)—தேகத்திலுள்ள மலத்தை யடக்குவது; வெளியில் விடுவது.

**உபஸ்தம்** (குய்யம்)—மூத்திரத்தை யடக்குவது; வெளியில் விடுவது. மேலும், ஆண்பெண்களுடன் கூடுவதனால் கரணங்களுக்கு ஆனந்தம் கொடுப்பது.

இப்படிக் கர்மேந்திரியங்களெல்லாம் கர்மங்களைச் செய்கின்றன; நீ யாதொன்றினையும் செய்வதில்லையாம்.

## (2) ஞானேந்திரியம்

**செவி**—வேத புராணங்களையும், சங்கீதங்களையும், பேரி முதலிய வாத்தியங்களையும், கெட்ட சப்தங்களையும் கேட்பது.

**கண்**—வெண்மை, சிவப்பு, மஞ்சள் முதலிய நிறங்களையும், பலவிதமான வடிவங்களையும் பார்ப்பது.

**நாக்கு**—இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, கசப்பு, கார்ப்பு, உவர்ப்பு என்னும் ஆறு உருசிகளை யறிவது.

**மூக்கு**—பலவகைப்பட்ட சுகந்தத்தையும், துர்க்கந்தத்தையும் அறிவது.

**தோல்**—குளிர்ச்சி, வெப்பம், மென்மை, கடினம் முதலியவற்றின் பரிசத்தை யறிவது.

இப்படிச் சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்து விஷயங்களையும் செவி முதலிய ஐந்து ஞானேந்திரியங்கள் அறிவனவாம். அதனால், கேட்டலும், தீண்டுதலும், பார்த்தலும், வாசனையறிதலும், உருசி பார்த்தலும் ஆகிய காரியங்கள் உனதல்லவாம். அவை ஞானேந்திரியங்களோடு சம்பந்தமுடையனவாமென்று அறிதல் வேண்டும்.

18. **சீடன்.**—இந்திரியங்களினும் பிராணனில் அதிகப் பிரியமிருப்பதனாலும், தேகத்தை விட்டுப் பிராணன் போனபோது மனிதன் இறந்தானென்று சொல்வதனாலும், பிராணனே நானென்று அறிகின்றேன்.

**குரு.**—மனிதன் கோரமான வியாதியினால் துன்பப் படும்போது பிராணன் போனால் சுகமென்று சொல்லுகின்றானன்றோ? அதனால் பிராணன் வேறு, நீ வேறு என்பது தெளிவாய் விளங்குமன்றோ? அதனால், பிராணனிலும் அதிகப் பிரியம் உன்னிடத்திலிருக்கின்றதென்பது தோன்றுவதாம்.

பசியினால் என் பிராணன் போகவிருந்தது, போஜனத்தினால் இப்போது திருப்தியடைந்தேன் என்பதனால் பிராணனில் எனது என்னும் மமகாரம் தோன்றுகின்றது.

யாதொரு வஸ்துவைப் பிடித்து, ஓரிடத்தில் வைப்பவன் அந்த வஸ்துவுக்கு வேறாயிருப்பான். யோகிகள் இரேசகம், பூரகம், கும்பகம் இவற்றினால் பிராணாயாமஞ் செய்து அதை ஓரிடத்தில் பந்தித்திடுவதனாலும், ரோகிகளுக்குச் சஸ்திர பிரயோகஞ் செய்யும்போது அவர்களுக்கு வருத்த முண்டாகாதபடி மயக்கமுள்ள வஸ்துவைக் கொடுத்து, பிராணசக்தி நடவாமல் ஓரிடத்திற் சேரும்படி செய்வதனாலும் பிராணவாயுவுக்கு நீ வேறாயிருக்கின்றாய்.

இரவில் நித்திரை செய்யும் சமயத்தில் பிராணவாயு ஜாக்கிரதையாயிருப்பினும் உன் உடம்பின் மேலுள்ள ஆபரணத்தைக் கள்ளன் கழற்றிக் கொண்டு போகும்போது அவனைத் தடை செய்வதில்லை. மேலும், யாதாவதொரு நண்பன் வரின், மரியாதை செய்வதில்லை. ஆகையால், பிராணன் ஜடமானது.

19. **சீடன்.**—பிராணன் ஜடமாயின், தேகத்தின் சேட்டைகள் எப்படி நடக்கின்றன?

**குரு.**—ஊசிகாந்தத்தின் எதிரில் வைத்த ஊசியானது தான் சுயமாக ஜடமாயிருப்பினும் மற்ற ஊசிகளை யிழுப்பதுபோலவும், ஜடமான காற்று ஒரு இடத்திலுள்ள வஸ்துவை மற்றொரு இடத்துக்குக் கொண்டு போவது போலவும், பிராணவாயு ஜடமாயினும் அவித்தையின் சந்நிதியை யடைந்து சேட்டைகளைச் செய்யும். ஆதலால், வெளியிலுள்ள வாயுவைப் போலப் பிராணவாயுவும் ஜடமாகும். நீ சேதனனானதனால், பிராணன் நீ யல்ல. பிராணவாயுவின் தர்மங்களும் உனக்கில்லை.

20. **சீடன்.**—பிராணவாயுவின் தர்மங்கள் எவை?

**குரு.**—வாயுக்கள் தேகத்தில் அநேகமாயிருந்து, அநேக காரியங்களைச் செய்து கொண்டிருக்கும். தேகத்தைத் தரித்திருப்பது, கர்

மேந்திரிய ஞானேந்திரியங்களுக்குப் பிரேரபணை செய்வது முதலிய கர்மங்கள் வாயுவைச் சேர்ந்தவை. அவற்றில் பிராணவாயுவே முக்கியமானது. பசி, நீர்வேட்கை முதலியவைகள் பிராணவாயுவுக்கு உண்டாவதன்றி உனக்கு உண்டாவதில்லை. அவை பிராணவாயுவின் தர்மங்கள்.

21. சீடன்.—கர்மேந்திரியங்களினும் ஞானேந்திரியங்களில் அதிகப் பிரியமிருப்பது போல பாஹ்ய இந்திரியங்களினும் அந்தர் இந்திரியங்களில் அதிகப் பிரியமிருப்பதனாலும், இந்திரியங்களுக்கு அதிபதியான மனத்தின் சம்பந்தத்தினால் பாஹ்ய இந்திரியங்களுக்கெல்லாம் ஞானமுண்டாதலினாலும், வியவகாரங்களெல்லாம் மனத்தினாலுண்டாவதனாலும், சுகதுக்காதிகளை மனமே அறிவதனாலும் மனமே நானென்று அறிகின்றேன்.

குரு.—என் மனம் நிம்மதியாயில்லை; ஆதலால், இப்போது என்னை உபத்திரவஞ் செய்யக்கூடாது என்றும், என் மனம் சாந்தமாயிருக்கின்றது; ஆதலால், இப்போது வைதிடினும் நான் தடுப்பதில்லை என்றும் சொல்வதனால் மனத்தில் எனது என்னும் மமதையுண்டென்பது விளங்குகின்றது. மனம் வேறு பக்கம் போவதும், நிலைப்பதும், மனத்தில் காமாதி விகாரங்கள் உண்டாவதும், உண்டாகாததும் உன்னாலறியப்படுகின்றன. இப்படி மனத்தின் ஸ்வரூபம் உனக்குத் தெரிகிறது. ஆதலால், நீ மனத்திற்கு வேறாயிருக்கின்றாய். எப்போதும் விஷயங்களிற் சஞ்சரிக்கின்ற மனதை நீ விவேகத்தினாலும், வைராக்கியத்தினாலும் தடுத்து, ஓடிப் போகாதபடி அதனை உறுதிப்படுத்துவதனாலும், மனம் ஜடமானது. நீ அதை யறிவதனால் மனம் நீ யல்ல. மனத்தின் தர்மங்களும் உனக்கில்லை.

22. சீடன்.—மனத்தின் தர்மங்கள் எவை?

குரு.—சங்கற்பம், விகற்பம் (சந்தேகம்), யாதாவதொரு வஸ்து இல்லையாயினும், இருக்கலாமென்னும் உணர்ச்சியாகிய இவையெல்லாம் மனத்தின் தர்மங்கள். இவை உனதல்ல. காமம், குரோதம், லோபம், மதம், மற்சரம் என்னும் விகாரங்கள் மனத்துக்கு உண்டாவதன்றி, உனக்கு உண்டாவதில்லை. மனத்தின் சுகதுக்கங்கள் உனக்கு உண்டாயின், உலகத்திலுள்ள மனங்களின் சுகதுக்கங்களெல்லாம் உனக்கு உண்டாதல் வேண்டும். அப்படி உண்டாகாமையினால் சுகதுக்கங்கள் உனக்கில்லை.

23. சீடன்.—துக்கம் மனத்தின் தர்மம். மனத்திற்கு உண்டாவ தென்பதை நிச்சயிப்ப தெப்படி?

குரு.—நெருப்பு இருக்கும் இடத்திற் சூடு உண்டு; அதனாற் சூடு நெருப்பின் தர்மம் என்று நிச்சயிக்கின்றோம். இப்படியே மன முள்ளவிடத்தில் துக்கம் தோன்றும். மனமில்லாத விடத்தில் துக்கம் தோன்றாது. உறக்கத்தில் மனமில்லை; அதனால் துக்கமில்லை. ஆத லால், துக்கம் மனத்தின் தர்மம். யாதாவதொரு வஸ்துவைக் கண்ட மாத்திரத்தில் அதை யுண்டதுபோல் எப்படி யாகாதோ? அப்படித் துக்காதிகளை நீ எதிரிட்டு அறிபவன். ஆனதனால், அவற்றை யநு பவிப்பவனல்ல. அந்தத் துக்கங்களுக்கு வேறாயிருக்கின்றாய். துக் கமே உன் தர்மமாயிருப்பின், அது எப்போதும் உன்னை விட்டு நீங் காது. அதனால், துக்கத்தை யொழித்துக் கொள்ளும் முயற்சியும் வீணாகும். துக்கங்கள் காமாதி விகாரங்களினால் உண்டாகின்றன. காமாதிகள் மனத்திற்கு உண்டாகின்றன. மேலும், உறக்கத்தில் நீ இருந்தும் அவ்விடத்தில் உனக்குத் துக்கமில்லாமையினால் துக்கம் உன் தர்மமல்ல. அப்படியே உனக்கு உண்டாவதில்லை. நீ கேவலம் சுகஸ்வரூபன்.

24. சீடன்.—சுகதுக்கமிரண்டும் மனத்தினாலறியப் படுவனவா யிருக்க, துக்கம் மனத்தின் தர்மமென்றும், ஆத்மா சுகஸ்வரூப னென்றும் கூறுவது எப்படிப் பொருந்தும்?

குரு.—நன்று வினவினாய். காமக் குரோதாதி விகாரங்களை யடைந்தபோது மனம் சஞ்சரிக்கின்றது (அலைகின்றது). இப்படி மனம் அலையும்போது துக்க முண்டாகின்றது. அதாவது மனத் தின் அலைவே துக்கமாம். அவ் விகாரங்களொழிந்து மனம் ஒருமுகப் படும்போது சுகம் தோன்றுகின்றது. அச் சுகம் ஆத்மசுகமாம். ஆத்ம சுகம் மனஅலைவினால் தடைப்பட்டிருந்து மனம் ஒருமுகப்படும்போது தோன்றுகின்றது. விரும்பிய பொருள் கிடைத்தபோது மனம் ஒரு முகப்படுவதனால் தோன்றும் ஆத்ம சுகத்தை விஷய சுகமென நினைத்து மூடர்கள் ஏமாறுகின்றார்கள். ஆதலால், மனத்தின் தர்மம் துக்கமே. நீ சுகஸ்வரூபன் என்பதில் ஐயமின்று.

25. சீடன்.—புத்தி பதார்த்தங்களை யெல்லாம் அறிவதனால் அதுவே நானென்று அறிகின்றேன்.

குரு.—ஸம்ஸயோத்தரத்தில் நிச்சயவிருத்தியுள்ளதும், இது, அது என்னும் பேதபாவனையுள்ளதும் புத்தியெனப்படும்.

1. என் புத்தி கூர்மையாயுள்ளது; சொன்னதெல்லாம் அறிவது; என் புத்தி மந்தமாயுள்ளது; ஒன்றும் தெரியவில்லை என்று சொல்வதனால் புத்தியினிடத்தில் எனது என்னும் மமகாரம் உண்டு.

2. புத்தியின் மந்தம், கூர்மையென்னும் ஸ்வரூபத்தை நீ அறிகின்றாய். அதனால் புத்தி நீயல்ல. அப்படியே புத்தியின் தர்மமான பேதபாவனையும் உனதல்ல. இப்படி நிச்சயமானதனால் நீ ஸ்தூல தேகத்துக்கு வேறாயிருப்பது போலச் சூக்கும தேகத்துக்கும் வேறாயிருக்கின்றாய்.

26. சீடன்.—சூக்கும தேகமென்பது யாது?

குரு.—கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, பிராணன்கள் ஐந்து, மனம், புத்தி என்னும் அந்தக்கரணங்கள் இரண்டு, ஆக மொத்தம் பதினேழு தத்துவங்கள் கூடினதே சூக்கும தேகமெனப்படும். இது ஸ்தூல தேகத்தைப் போல ஸ்தூலமாகக் காணப்படாமையினால் சூக்கும தேகமென்றும், ஆத்மாவை லக்ஷணத்துடன் அறியக் காரணமாவதனால் லிங்க தேகமென்றும், சிவத்துடன் போகம் கிடைப்பதனால் (சிவபோகத்திக்குச் சாதனமாவதனால்) போகாங்கமென்றும் பெயர் பெறும். மேற்கூறிய தத்துவங்களெல்லாம் நீயல்ல. ஆதலினால், சூக்கும தேகத்திலிருக்கும் பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம் என்னும் மூன்று கோசங்களும் (பைகளும்) நீயல்ல. மேலும், இந்தச் சூக்கும தேகத்தின் தர்மங்களும் உனக்கில்லை.

27. சீடன்.—ஐந்து பிராணன்கள் எவை?

குரு.—அவை பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன் என்பன.

28. சீடன்.—சூக்கும தேகத்தின் தர்மங்கள் எவை?

குரு.—இந்தச் சூக்கும தேகமானது மரணம், மூர்ச்சை, உறக்கம், பிரளயம், அஜ்ஞானமாகிய ஐந்து அவஸ்தைகளில் தனக்குக் காரணமான அவித்தையில் (காரண தேகத்தில்) அடங்கிப்போகும். மேலும், பழைய ஸம்ஸ்காரத்துடன் கர்மானுஸாரமாகி ஸ்வர்க்க நரகாதி லோகங்களில் சுகதுக்கங்களை யநுபவித்து, உயர்ந்ததும், இழிவானதுமான யோனிகளில் ஜனனமெடுக்கும். அதாவது, இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் போக்கு வரவுள்ளது. கர்மபலனாகிய சுகதுக்கங்களை யநுபவிப்பது. இராகத் துவேஷாதிகள், ஸம்ஸ்காரம் (வாசனை),

யான், எனது என்னும் பாவனை, பேதபுத்தி ஆகிய இவையெல்லாம் சூக்கும தேகத்தின் தர்மங்கள். இவையெல்லாம் உனதல்லவென்று நிச்சயமாய் நம்பு.

29. சீடன்.—குருநாதனே! தாங்கள் உபதேசித்தபடி விசாரிக்குமிடத்து, ஸ்தூலதேகம், தசேந்திரியங்கள், பிராணன், அந்தக்கரணங்கள் ஆகிய இவைகள் நானல்லவென்று அறியப்பட்டன. யான் என்று சொல்லக்கூடியதாக வேறொன்றுமில்லை. ஆதலால், ஒன்றும் தோன்றாதிருப்பதே நானோ? எப்படி?

குரு.—எஜமானன் சரக்கு நிறைத்து வைத்த வீட்டைக் காலி செய்யும்படி உனக்குச் சொன்னானென்றும், அவன் சொல்லியபடி சாக்குகளை யெல்லாம் எடுத்து வெளியிலிட்டு அந்த வீட்டில் நீ நின்றிருக்கின்றாயென்றும் அறிந்துகொள். அப்போது எஜமானன் வந்து சரக்குகளையெல்லாம் எடுத்து வெளியில் வைத்தாயா, உள்ளே ஒன்றுமில்லையே யென்று கேட்டபோது நீ ஒன்றும் மிஞ்சவில்லை யென்று உத்தரம் கொடுப்பினும், ஒன்றும் மிஞ்சவில்லை யென்று சொல்பவனை நீ எப்படி அவ்விடத்தில் மிஞ்சியிருப்பாயோ, அப்படி இந்தத் தேகத்தில் தேகாதிகள் நானல்ல வென்று தள்ளப்பட்டாலும் ஒன்றும் மிஞ்சவில்லை யென்று சொல்பவனாகிய நீ இருக்கின்றாய். மேலும், ஒன்றுந்தோன்றாதிருந்த அவஸ்தையை நீ அறிகின்றாய். மேலும், ஒன்றும் தோன்றாதிருப்பது நீயல்ல.

30. சீடன்.—ஒன்றும் தோன்றாத அவஸ்தை யென்பது யாது? அதனை யறிவதெப்படி?

குரு.—ஆமையானது மேயுங்காலத்தில் தலை முதலிய தன் அவயவங்களை வெளியில் நீட்டும்; பயம் அல்லது விஸ்ராந்தியடையுங் காலத்தில் தலை முதலிய அவயவங்களை உள்ளே இழுத்துக்கொண்டு அவைகளை மறைத்துக் கொள்ளும்.

கோழியானது மேய்கின்ற தன் குஞ்சுகளை அருகில் வரச் செய்து வெளியிற் செல்லாதபடி பக்கத்தில் அடக்கிக்கொண்டு, ஒரு இடத்தில் உறங்கும்.

இவைகளைப்போல அஜ்ஞானம் (அவித்தை) மனம், புத்தி, இந்திரியங்கள் என்னும் தன் குட்டிகளை ஜாக்கிரத் காலத்திலும், ஸ்வப்பன காலத்திலும் விஷய சுகத்தை யநுபவிப்பதற்கு வெளியில் விட்டிருக்கும். விஸ்ராந்தி காலத்தில் அவைகளை யெல்லாம் தன்னிடத்தில்

அடக்கிக்கொண்டு, ஆத்மாவின் ஆச்ரயத்தில் ஸ்வஸ்தமாயிருக்கும். அதனால், ஒன்றும் தோன்றாத அவஸ்தையே உறக்கம். அதுவே காரண தேகமான மறதி (அவித்தை). இது ஸ்தூல சூக்ஷ்ம தேகங்களாகிய இரண்டிற்கும் காரணமாதலினால் காரணதேகமென்றும், சிவலிங்கத்தில் ஐக்யமாகும் அநுஸந்தான லக்ஷணமுள்ளதாதலினாலும், சிவயோகத்திலுள்ள சுகம் கிடைப்பதனாலும் (சுகத்தை யநுபவிக்கும் சாதனமாதலினாலும்) யோகாங்கமென்றும் ஆநந்தமய கோசமென்றும் பெயர் பெறும். இதுவரையில் ஒன்றும் அறியாமல் சுகமாய்ப்படுத்திருந்தேன் என்று நீ சொல்வதனால் யாதொரு வஸ்துவும் தோன்றாதிருந்தமையும், சுகத்திலிருந்தமையும் ஆகிய இரண்டு விஷயங்களை யநுபவித்துக் கூறுகின்றாய். அந்த உறக்கத்தில் நீ இல்லாமலும், அவற்றை யறியாமலுமிருந்தால் எப்படிச் சொல்ல முடியும்? அநுபவமில்லாத விஷயத்தைச் சொல்லுதல் முடியாதன்றோ? அதனால், அந்த உறக்கத்தில் நீ இருந்து அவற்றை யறிகின்றாய். மேலும், என் மறதிக்கு நெருப்பு வையுங்கள். நான் ஒரு வஸ்துவை இங்கே வைத்துக்கொண்டு எந்நேரம் தேடினேன் என்று நீ சொல்வதனால் மறதியினிடத்தில் உனதென்னும் அபிமான மிருப்பதனால் மறதி (உறக்கம்) நீ யல்ல.

31. சீடன்.—குருநாதனே! இப்போது நான் யார் என்று எனக்கு அறிவியுங்கள்.

குரு.—“ஸர்வத்யாகாந்தரே நாஸ்திஜ்ஞானமாத்ர பாதர்ஸகம்” என்னும் ஆகம வசனப்படி வஸ்துக்களெல்லாம் (தேகாதிகளெல்லாம்) நானல்லவென்று அவற்றை நீக்கிவிட்ட பிறகு, ஒன்றும் மிஞ்சவில்லை யென்னும் எந்த ஞானம் இருப்பதோ? அந்த இல்லை யென்னும் ஞானத்தைக் காண்பவனே நீ (அதுவே உன்னைக் காண்பித்ததாயிற்று). அதாவது இந்த ஸ்தூலதேகம் முதல் அஞ்ஞானம்வரையில் எல்லாம் உன்னால் அறியப்படுகின்றன. முடிவில் அவை யெல்லாவற்றையும் அறியும் யாதொரு அறிவு உண்டோ? அந்த அறிவே நீ என்பது சித்தமாயிற்று.

32. சீடன்.—தேகாதிகளில் எனது என்னும் வியவகாரம் இருப்பதுபோல என் அறிவு என்பதனால் அறிவுக்கு நான் வேறாயிருப்பேன் என்று சொல்லல் வேண்டுமல்லவா?

குரு.—குழந்தாய்! சற்று கவனமாய்க் கேள். என் அறிவு என்றால் சொல்லுபவனான நீ யார்? அறிவையறியும் நீ அறிவேயா

யிருத்தல் வேண்டுமல்லவா? ஒரு விளக்கு மற்றொரு விளக்கை எப்படி விளங்கச் செய்யாதோ? அப்படியே அறிவை யறிபவன் அறிவினும் வேறாயிருத்தல் முடியாது. அவனும் அறிவாயிருத்தல் வேண்டும். விஷயாதிகளை யறியும் அறிவு உனக்கு வேறாயிருக்கும். அதில் எனது என்னும் வியவகாரம் சம்பவிக்கும். எல்லாவற்றையும் அறியும் அறிவு ஒன்று உண்டே. அதனை என் அறிவு என்றால் தோஷமுண்டாகும். ஆதலால் அறிவே நீ யாயிருக்கின்றாய்.

33. சீடன்.—அறிவே நான் என்பதற்கு ஆதாரங்களுண்டோ?

குரு.—உண்டு. நிஜகுண சிவயோகிகள் தமது கைவல்ய பத்ததியின் ஞானபாதத்திற் கூறுகின்ற வாக்கியங்கள் :—

1. அறிவே நீ யென்று ஸத்குரு உபதேசிக்கத் தெரிந்தவனே சமர்த்தன்.

2. அறிவே தானென்று சந்தேகமில்லாமல் உணர்பவனே சமர்த்தன்.

34. சீடன்.—குருநாதனே! உன் உண்மை ஸ்வரூபத்தை யறிந்தவுடனே, ஆவரண தோஷம் நீங்கி, லிங்கஸ்வரூபம் உனக்குத் தோன்றுமென்று முன்னர் உபதேசித்தீர்களன்றோ? இப்போது அநேக யுக்திப் பிரமாணங்களினால் தாங்கள் போதித்தபடியினால் அறிவே நான் என்னும் உண்மை யுணர்ந்தேன். ஆயினும், லிங்கம் தோன்றவில்லையே.

குரு.—எந்த வஸ்து உனக்கு வேறாயிருப்பதோ, அந்த வஸ்து உனக்குத் தோன்றும். கண் கண்ணைப் பார்த்தல் வேண்டுமாயின் கண்ணுக்குக் கண் வேறல்ல. ஆதலினால், எப்படிக் கண் கண்ணைப் பார்க்க முடியாதோ? அப்படி லிங்கம் எதிரே தோன்றாது. ஆதலால், லிங்கமே நீ யாயிருக்கின்றாய். முன்னே லிங்கமே யில்லை, தோன்றவில்லை யென்று ஆச்சரியமாக நினைத்து, இப்போது எவன் சொல்வானென்று கேட்டாய். இப்போது லிங்கமே நீ யாயிருப்பதனால், லிங்கமில்லை, தோன்றவில்லை யென்னும் ஆவரண தோஷம் நீங்கிற்று. லிங்கமே நீ என்பதற்குச் சந்தேகமே யில்லை.

35. சீடன்.—நானே லிங்கம் என்பதற்கு ஆதாரங்களுண்டோ?

குரு.—அநேகம் உண்டு. பாடசாலையில் போதிக்கும் வியாகரணம் கூட நீயே லிங்கம் என்று கூறும். எப்படியெனின், வஸ்துவின்

ஞானத்தின் அல்லது அஜ்ஞானத்தின் அடையாளத்துக்கு லிங்க மென்றும், ஞானத்தின் அடையாளம் மனிதர்க்கு இருப்பதனுல் அவர்களில் ஆண்களுக்குப் புல்லிங்கமென்றும், பெண்களுக்கு ஸ்த்ரீலிங்க மென்றும். உயிருள்ளனவும், உயிரில்லாதனவு மாகிய மற்றப் பொருள்களுக்கு ஞானமில்லாமையினுல் நபும்ஸக லிங்கமென்றும் வியாகரணம் பெயர் கூறும். குழந்தைகளும் ஞானமில்லாமையினுல் உன்னுல் அறியப் படுவதனுல் நபும்ஸக லிங்கங்களெனப்படும். அப்படியே, இந்த உன் தேகம், இந்திரியங்கள், பிராணன், மனம், புத்தி முதலானவைகளும் ஞான மில்லாமையினுல் (உன்னுல் அறியப் படுவதனுல்) நபும்ஸக லிங்கங்க ளெனப்படும். நீ மாத்திரம் எல்லாவற்றையும் அறிவதனுல் புல்லிங்க மெனப்படுவாய். இந்தக் காரணத்தினுலும் வெளிச்சம் இருள் போல விரோதமான தர்மங்களுள்ள தேகாதிகளுக்கு நீ வேருயிருக்கின்ருய் யென்பது தெளிவாகிறது. அதனுல் தேகத்தில் எல்லாவற்றையும் விளக்கும் (அறியும்) யாதொரு அறிவு உண்டோ? அதுவே லிங்க மெனப்படும். லிங்க சப்தம் கம் தாதுவினுல் பிறந்தது. கம் தாது ஞானர்த்தமா யுள்ளது. ஆதலால், லிங்கம் சித்ரூபமானது. நீயே அறிவென்பது சித்தமானதால் அந்தச் சித்ரூபலிங்கமே நீயாயிருக்கின்ருய். தான் என்பது ஆத்மா வென்னும் பொருளில் உபயோகப்படுத்தும் ஸர்வ நாமமாயுள்ளது. தான் என்ருல் ஆத்மா வென்றே யறியத்தக்கது. அந்த ஆத்மாவுக்குப் பெயர் நீ, நான், தான் என்று உபயோகிப்பார்கள். அதனுல், வியாகரணம் நீ ஆத்மாவாயிருக்கிருய் என்று கூறும்.

## வேறு ஆதாரங்கள்

1. ருக்வேதம் ஐதரேயோபநிஷத் “ ப்ரஜ்ஞானம் ப்ரஹ்மம் ” தேகத்திலுள்ள விசேஷமான அறிவே ப்ரஹ்மம் (லிங்கம்) என்று கூறும்.

2. அதர்வணவேதத்தின் மாண்டூக்யோபநிஷத் “ அயமாத்மா ப்ரஹ்மம் ” இந்தத் தேகத்திலுள்ள ஜீவாத்மாவே ப்ரஹ்மம் (லிங்கம்) என்று கூறும். இந்த வாக்கியங்களெல்லாம் அறிவே ஆத்மா, ஜீவன், லிங்கம், பரப்ரஹ்மம், பரசிவன், பரமாத்மா, பரமேசன், பரஞ்சோதி என்று கூறுகின்றன. இந்தத் தேகத்திலுள்ள அறிவே நீ யானதனுல் நீயே ஆத்மா.

*வித்தாத்புத்ர: ப்ரிய: புத்ராத் பிண்ட:*
*பிண்டாத் ததேந்த்ரியம்*
*இந்த்ரியாச்ச ப்ரிய: ப்ராண: ப்ராணா*
*தாத்மாபர : ப்ரிய:*

என்னும் வசனப்படி பொருளினும் மகன் பிரியன்; மகனினும் ஸ்தூல தேகம்; தேகத்தினும் இந்திரியங்கள்; இந்திரியங்களினும் பிராணன் பிரியமாயிருக்கும்; பிராணனினும் நித்தியாநந்த ஸ்வரூபமான எந்த ஆத்ம தத்துவமுண்டோ, அதுவே அதிகப் பிரியத்துக்கு ஆஸ்ரயமாயிருப்பதனால் அந்த ஆத்மாவே நீ. இந்தத் தேகேந்திரியாதிகளினும் வேறானவனும், அழிவில்லாதவனுமாயிருக்கும் ஆத்மாவே நானாயிருக்கின்றேன் என்னும் ஞானத்தை எவன் அடைவானோ, அவன் பிண்ட ஞானியெனப் படுவான். பிண்டஞானியான உன்னிடத்தில் லிங்கம் தாதாத்மயமா யுள்ளது. ஆதலால், நீ லிங்கமா யிருக்கின்றாய். நற்சீடனே! சச்சிதாநந்த லக்ஷணமுள்ள ஆத்மாவே நான் என்னும் நிச்சயத்தினால் கிடைக்கும் புண்ணியத்துக்குச் சமானமான புண்ணியமே யில்லை. ஆத்மவித்சோகந்தரதி (தரதி சோக மாத்மவித்) என்னும் வசனப்படி ஆத்மாவை யறிந்தவன் ஜனனமரண துக்க சாகரத்தைத் தாண்டுகின்றான். ஆதலால், நீ தன்னியன்; இந்த இரகசியமான ஆத்ம தத்துவத்தை உன்னிடமிருந்த அன்பினால் அறிவித்தேன். ஐந்து பைக்குள்ளிருந்த இரத்தினத்தைப் போல நீ பஞ்சகோசத்திலிருந்து மூன்று தேகங்களை விளக்குகின்றாய். விளக்கின் சோதியை யாதும் எப்படிப் பற்றாதோ? அப்படி உன்னை (அறிவை)ச் சுகதுக்க முதலிய கர்ம பலன்கள் பற்றா. முன்னே உனக்குத் தெரிவித்தபடி தேகாதிகள் நானல்ல. தேக முதலியவைகளின் தர்மங்களான ஜனனம், மரணம், இராகம், துவேஷம் முதலியன எனதல்ல. எல்லாவற்றையும் விளங்கச் செய்யும் சிவஸ்வரூபமே (லிங்கஸ்வரூபமே) தன் ஸ்வரூபமென்று ஸதா சிவசிந்தனையில் இருத்தல் தக்கது.